345

REG. NO. M. 2997.

RÉPUBLIQUE FRANÇAISE

LIBERTÉ.—ÉGALITÉ.—FRATERNITÉ.

தனிப்பிரதி அணு 1

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.




LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
CEYLON.

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, No. 2,
Pondichéry.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. புதுவை, யுவ ஹு புரட்டாசி மீ உச உ (10—10—35) NO. 46.

## திருவாய் மொழி.

யானேட்டியேன்னு ளிருத்துவமேன்றிலன்
தானேட்டிவந்தேன் தனிநேஞ்சைவஞ்சித்து
ஊனேட்டிநின்றேன் னுயிரில்கலந்து—இயல்
வானேட்டுமோஇனி யேன்னேநேகிழ்க்கவே.

களிப்பும்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று
ஒளிக்கோண்டசோதியமாயுடன்கூடுவதேன்றுகொலோ
துளிக்கின்றவானின்நிலம் சுடராழிசங்கேந்தி
அளிக்கின்றமாயப்பிரானடியார்கள்குழாங்களேயே.

ஒயுமூப்புப் பிறப்பிறப்பு பிணி
வீயுமாறுசெய்வான்திருவேங்கடத்
தாயன்நாண்மலராமடித்தாமரை
வாயுள்ளும்மனத் துள்ளும்வைப்பார்கட்கே.

தோற்றக்கேடவையில்லவனுடையானவனேநூர்த்தியாய்
சீற்றத்தோடருள்பேற்றவனடிக்கீழ்ப்புகநின்றசேங்கண்மால்
நாற்றத்தோற்றச்சுவையோலி உறலாகிநின்ற எம்வானவ
ரேற்றையேயன்றி மற்றேருவரையானிலே னேழுமைக்
[குமே.

ஆயேயிவ்வுலகத்து நிற்பனவும்திரிவனவும்
நீயேமற்றேருபோருளு மின்றிநீநின்றமையால்
நோயேமூப்பிறப்பிறப்புப் பிணியேயேன்றிவையோழியக்
கூயேகோள்ளடியேனேக் கோவுலகம்காட்டேலே.

அறிந்தறிந்துதேறித்தேறி யானேனதாவியுள்ளே
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைத்து
பிறந்தும்சேத்தும்நின்றிடரும் பேதைமைதீர்த்தோழிந்தேன்
நறுந்துழாயின்கண்ணியம்மா நானுன்னேக்கண்டுகோண்டே.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றுன்வந்து முந்துமினே.

[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை
யுவ ௵ புரட்டாசி ௴ 24௳

## கீழ்மை யகற்று.



ஔவையார் அருளிய "ஆத்தி சூடி" என்னும் வேத சூத்திரக் கொத்துள் ஒன்றாகி மிளிரும் இவ் அமுத வாக்கியம் உலகியலோடு பாரமார்த்திக மாகிய உண்மை நிலைக்கும் ஒப்பியதா கின்றது. உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளோ எனின், உலகோர் தமது படிப்பு வல்லபத்தால் அறிய முடியாத ஆழ்ந்த மறையாகி அமைந்துள்ளது. இவ் இருவகை நிலைக்கும் ஒப்பிய பொருள் ஈண்டு ஒரு சிறிது கூறப் படும்.

கீழ்மை—(உன்னிடத்துள்ள) இழி வான குணங்களை — செயல்களை, அகற்று — நீக்குவாயாக; நீக்கி நல்வழி யில் ஒழுகுவாயாக என்பது உலகிய லுக்கு ஒப்பிய பொருளாகும். உண்மை நிலைக்கும் இஃதே ஒருவாற்றான் ஒப் பியதாகும். கீழ்மை—கீழான தன்மை — குணம் — செயல் எனப்படும். விதி விலக்குகளைப் பொருட்படுத்தா நீர் மையே — நிறை முறை இன்றி மனம் போனவாறு ஒழுகுவதே கீழான குணம் — கீழான செயல் எனப்படும். கீழான — இழிவான — நிறை முறை இல்லாத ஒழுக்கமுடையவரே கயவர் எனப்படுவர். இவர்பால் நல்லொழுக் கம் காணப்படமாட்டாது. ஒரோ வழி நல்லொழுக்கம் காணப்படுமாயின், அஃது நடிப்பே ஆகும். அத்தகைய ஒழுக்கமும் அரச தண்டத்துக்கு அஞ்சுதலாலும் பொருட் பேறு பற் றிய அவாவினாலும் அன்றி, வாய்மை யாக — இயற்கையாக அமையமாட் டாது.

### குறள்.

அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(ஷை 108-ம் அதி. கயமை செ. 5.)

என்றனர் பொய்யில் புலவர். கீழ் நிறைப் பொலிவுடைய கயவர்பால் நல் லொழுக்கம் காணப்படுமாயின் அதற் குக் காரணம் அரசனால் தண்டனை வரும் என்று அஞ்சும் அச்சமே ஆகும். அஃது ஒழிய, தம்மால் அவாவப்பட்ட பொருள் அவ் ஒழுக்கத்தால் உளதாகு மானால் அஃது ஒரு சிறிது உண்டா கும் என்பது இதன் பொருளாகும். பொருள் அவாவினால் ஒழுக்கம் உடை யார்போல் காணப்படுதல் வேடம் பூண்டு நடிப்போர் பெற்றியாலும் அறி யப்படும்.

[க்ஷயம்— கயம் என்பது குறைதல் — அழிதல் எனப் பொருள்படும்.]

மனம் போனவாறு ஒழுகும் நிறை முறை இல்லாத ஒழுக்கங்களால் அசுத்த நிறையாகிய கீழ் நிறையை அதிகரிக்கச் செய்து "உற்ற ஆக்கை யின் உறுபொருள்" ஆய் விளங்கும் அமல நிறையாகிய சுத்த நிறையை சுத்த நிறையாகிய சத்துவத்தை அணு அணுவாகக் கெடுப்பவரே—கெடுத்து விரைவில் தென்புலக்கோமகனுக்கு நல் விருந்தாகி ஒழிபவரே கயவர் எனப் படுவர் — கீழோர் எனப்படுவர். கீழ் நிறைப் பொலிவாகிய அசுத்த நிறை யின் ஆதிக்கமுடைய மாக்களாகிய கய வர் கடவுள், புண்ணிய பாவம், இம்மை மறுமை, வீடு என்பனவற்றை உண ரார்; பழிபாவங்களுக்கு அஞ்சார்; பிறர்க்கு எவ்வாற்றானும் இடுக்கண் இழைக்கவே பகீரதப் பிரயத்தனம் பண்ணுவர்; தம்மை நியமிப்பாரின்றி — கேட்பாரின்றி மனம் போன வாறு தடித்தனமாகவே ஒழுகுவர்; பிறர்க்குத் தீதாய் ஒழியினும் தாம் நினைத்தவற்றை எல்லாம் செய்து முடிப்பர்; மேவன செய்து — அஃதா வது விரும்பியனவற்றை எல்லாம் செய்து தமது இச்சைகளைப் பூர்த்தி பண்ணுவர். இவ்வாறு அச்சம் என் பது சிறிதும் இன்றி மேவன செய்து ஒழுகுதலில் மிக்க வன்மை உடைய ராதல் பற்றியே கயவரைத் தேவருக்கு ஒப்பானவர் என்று புகழ்பவர் போலப் பழித்துக் கூறினர் எமது பொய்யில் புலவர் என அறிதற்பாற்று.

### குறள்.

தேவர னையர்கயவர் அவருந்தா(ம்)
மேவன செய்தொழு கலான்.

(ஷை ஷை செ. 3.)

பின் வரும் தேவர் திருவாக்கும், கீழ் நிறைப் பொலிவுடைய கயவர் பழி பாவங்களுக்கு அஞ்ச மாட்டார் அஃ தாவது அவற்றால் தம் நெஞ்சத்துக் கவலை இல்லாதவர் எனவும், அதனால் தமக்கு உறுதியானவற்றைக் கடைப் பிடித்துப் பழி பாவங்கட்கு அஞ்சி ஒழுகும் மேலோரினும், கயவரே திரு வுடையவர் எனவும் குறிப்பால் மிக்க

இகழ்ச்சி தோன்ற அக் கயவரைப் புகழ்ந்து கூறுகின்றமை காண்க.

## குறள்.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(டி டி செ. 2.)

தமக்கு உறுதியான வாய்மையைக் கடைப் பிடித்து ஒழுகும் மேலோரினும் பார்க்க, கயவர் எனப்படுவோர் மிக்க நலப்பாடுடையர். எனெனில், அம் மேலோர் போலப் பழிபாவங் களுக்கு அஞ்சாமையால் தமது மனத்துக் கவலை இல்லாதவர் ஆதலால் என் பது இதன் பொருளாகும். பின்வரும் செய்யுளும் இக்குறட்பாவின்பொருளை நன்று புலப்படுத்துகின்றது.

## நால்வர் நான்மணிமாலை.

பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெருரி னழுங்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பை நீயே
பேயேன் பெருது பெற்றூர் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப ஆதலாலே
"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்" எனும்
செஞ் சொற் பொருளின் தேற்றறிந்தே
[னே.

இவ்வாறு மணிவாசகப் பெருமான் நிலைக்கும் தமது நிலைக்கும் உள்ள இடையீட்டின் பெற்றி கூறினர் துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். பல் லாற்றானும் தமக்கு உறுதியானவற் றைக் கடைப் பிடித்து ஒழுகிய சிவ நேசப் பெரியாரும் புலவர் சிங்கமுமாகிய சிவப்பிரகாச சுவாமிகளே இவ் வாறு கூறினர்கள் என்றால், உறுதியா வன ஒன்றும் அறியாது உழலும் எம் போலிய கயவராகிய உலகமாக்கள் திற னைக் கூறவும் வேண்டுமா? மணிவாசகர் முதலிய மெய்யடியார் எல்லாம் குருவருளால் வாய்மையைக் கடைப் பிடித்துக் "கீழ்மை அகற்"றி ஒழுகு தற்கண் — அசுத்த நிறையை மாற்று தற்கண் அடைந்த அளவிறந்த துன் பங்கள் கீழ்மை அகற்றி நித்தியத்துவம் பெற அறியாது சாதலடைந்தவரும் — சாதலை எதிர்பார்த்து வீற்றிருப் பவருமாகிய உலக மாக்கள் சிந்தனை சொற் செயல்களுக்கு அளவு படுவன ஆகுமா? மெய்யடியார் அருளிய பாடல் களே, கீழ்மையை வாய்மையாக அக ற்றி உய்தற்கண், அவர்கள் அடைந்த துன்பங்களை நன்று புலப்படுத்துவன வாகும்.

கீழ்மை எனப்படும் கீழ் நிறைப் பொலிவினால் ஆய இழிந்த குணங்கள் —தீய செயல்கள் ஐயறிவுடைய—ஐய றிவும் பூரணப்படாத மாக்களுக்கே உரியன ஆகும். கீழ்மை அகற்றுதலால் ஆரோகணம்பெற்று ஆறறிவும் பூரணம் பெற்றவரே மக்கள் எனச் சுட்டிக் கூறப்படுதற்கு — விதந்து கூறப்படு தற்கு உரியராவர். இவரே உயர்ந் தோர் — மேலோர் — ஆரோகண கெதியுடையவர் என்க.

"உயர்திணைஎன்மனார்மக்கட்சுட்டே"

எனவும்,

"மக்கள்தாமே ஆறறிவுயிரே"

எனவும் விதந்து கூறினர் தோல் காப்பியரும். கயவராகிய மாக்களும் ஒழுக்கத்தால் மக்களின் முற்றாக வேறுபட்டவரே ஆயினும் உருவத் தால் அம் மக்களையே ஒத்திருக்கின் றூர் எனவும், இது போன்ற ஒப்புமை யைத் தாம் காணவில்லை எனவும் மிக்க வியப்பும் குறிப்பால் மிக்க இழிப்பும் தோன்றக் கூறுகின்றூர் அறிவு வீற் றிருந்த செறிவுடை மனத்தராகிய எமது பொய்யில் புலவர்.

## குறள்.

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாம்கண்ட தில்.

(டி டி செ. 1.)

ஒப்பாரி — உவமை. உறுப்பால் ஒப்புமை உடையாராயினும் குணம் செயல்களால் மக்களின் முற்றாக வேறு பட்டவர் மாக்கள் என்பது இதனால் நன்று வலியுறுகின்றது.

'மாக்கள்தாமே ஐயறிவுயிரே'

எனத் தோல்காப்பியரும் ஆறறிவு பூர ணம் பெற்ற மக்களின் வேறுபட்ட வரே மாக்கள் எனக் கூறியமை காண்க.

அசுத்த நிறை அமைந்த பௌதிக பஞ்சீகரணிப் பாலாய சரீர நிலையும் மன நிலையுமே கீழ்மைக்கு — கீழான — இழிவான குணம் செயல்களுக்குக் காரணமாகும்.

மாயா காரியமாகிய காமம் முதலிய வற்றைக் கருவியாகக் கொண்டே இயற்கை வடிவாக விளங்கும் இறை வனுகிய கடவுள் சிருட்டி முதலிய செயல்களை உஞற்றுகின்றான். சீவர் கள் காமம் முதலிய இவ் ஆயுதங்களை — கருவிகளைத் தம்முடையன எனத் துணிந்து அவ் இறைவன் பால் இவற் றைத் தற்சுதந்திரத்தால் களவாண் டதுமல்லாமல், இவ் ஆயுதங்களை நிறை முறையோடு வழங்கிப் பிரபஞ்சப் போரில் — மாயா யுத்தத்தில் வென்றி பெற்று உய்தியடைதற் கேற்ற பயிற்சி இல்லாதவர்களாதலால் — பழக்கம் தெரியாதவர்களாதலால் பக்குவம் — இல்லாதவர்களாதலால் — இவற்றால் தங்களைத் தாங்களே கொலை செய்து கொள்ளுகின்றூர்கள். இவ்வாறான அநர்த்தங்கள் எல்லாம் கருணைநிதியா கிய இறைவன்பால் சுமத்தப்படுவன ஆகுமா?

## கைவல்யம்

"இந்தச் சீவனால் வருமறுபகையெலாம்
[இவன் செயலல்லாமல்
அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள்
[அதோ கதி அடைவார்கள்
..............................."

என ஆன்றோர் கூறியதும் ஈண்டு நோக்கற்பாலதேயாம். கொலை, களவு,

கள், காமம்; பொய் என்பனவே இழிந்த குணங்கள் — செயல்கள் என நூல்களால் கண்டிக்கப்பட்டன ஆகும். களவு என்பதில் சூது — வஞ்சகம் என்பனவும் அடங்கும். காமம்முதலிய வற்றில் கன்றிய மனம் உடையராய் நிறைமுறை இன்றி ஒழுகுவோரே இம்மையில் இழிந்தோர் என அறிவுடையோரால் புறக்கணிக்கப்பட்டு மறுமையில் நரகு எனப்படும் பாழ்ங் குழிக்கும் ஆளாகின்றனர்.

## மணிமேகலை.

"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்
உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை"

(ஷை 24-வது ஆபுத்திரனுடைடைந்த (காதை அடி 76, 77.)

"முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீ ருலகில்
கடியப் பட்ட ஐந்துள ; அவற்றில்
கள்ளும் பொய்யும் களவும் கொலையும்
தள்ளா தாகுங் காமம் ; தம்பால்
ஆங்கது கடிந்தோர் அல்லவை கடிந்தோர் [என
நீங்கின ரன்றே நிறைதவ மாக்கள் ;
நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகந் தன்னிடை யுழப்போர்

(ஷை 22-வது சிறைசெய்காதை அடி 169–[176.)

[முடிபொரு ளுணர்ந்தோர் — தத்துவ ஞானிகள். "கள்ளும் பொய்யும் களவும் கொலையும் தள்ளா தாகும் காமம்" என்பது நிறை முறை இல்லாத அசுத்த காம நுகர்ச்சியே மற்றைய கள்ளுணல், பொய் கூறல், களவு, கொலை என்பனவற்றிற்குக் காரணம் என்பதனை உணர்த்தி நின்றது. காமமுடையோர் மற்றைய குற்றங்களையும் உடையராதலே இயற்கை முறையாகும் என்றபடி. பின் வரும் செய்யுளும் இவ் உண்மையையே வலியுறுத்துகின்றது.

## திருவிளையாடற் புராணம்.

காமமேகொலைகட்கெல்லாங்காரணங்கண் [ணோடாத
காமமேகளவுக்கெல்லாங்காரணங்கூற்ற [மஞ்சுங்
காமமேகள்ளுண்டற்குங்காரணமாதலாலே
காமமேநரகபூமிகாணியாக்கொடுப்பதென் [றான்.

(ஷை மகாபாதகந்தீர்த்தபடலம் செ. 27.)

நிறை முறை இல்லாக் காமத்தால் இன்பம் இன்றித் துன்பமே உளதாய் இருமையும் கெடும் என்பதனை நன்று வலியுறுத்தும் பிரமாணங்கள் வேத நூல்களிலும் மற்றைய நீதி நூல் முதலியவற்றிலும் பரக்கக் காணப்படும். சில காட்டுதும்.

## திருமந்திரம்.

ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

(ஷை 1-ம் தந். பிறன்மனைநயவாமை செ.1.)

## நாலடியார்.

அறம்புகழ்கேண்மைபெருமையிந்நான்கும்
பிறன்றாரநச்சுவார்ச்சேரா — பிறன்றார
நச்சுவார்ச்சேரும்பகைபழிபாவமென்
றச்சத்தோடிந்நாற்பொருள்.

(ஷை 9-ம் அதி. பிறன்மனைநயவாமை செ.2)

பிறன் மனையாளை விரும்பும் வியபிசார ஒழுக்க முடையவன் அறம் முதலிய நாற் பொருளையும் இழந்து பழி பாவங்களையே அடைவான் என்பது இதன் பொருளாகும்.

## குறள்.

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன் [கடை
நின்றாரிற் பேதை யாரில்.

(ஷை 15-ம் அதி. பிறனில்விழையாமை [செ. 2.)

என்றனர் பொய்யில் புலவர்.

அறன்கடை—பாவம். பாவச் செயல்களில் தலை நின்றவர் யாவருள்ளும் பிறன் மனையாளை விரும்பி அவன் வீட்டு வாயிலில் சென்று நின்றவரினும் அறிவிலார் பிறர் இல்லை என்பது இதன் பொருளாகும். பேதை என்றார் நிறை முறை பிறழ்ந்து பிறன் உடைமையை அவாவி அச்சத்தால் இன்பமும் இழத்தல்பற்றி.

மருளுடம்பினர்க்குரிய அசுத்தமான காமம் என்பதில் நிறை முறை இல்லாது அவாவுவன அடங்கும். அஃதாவது நிறை முறை இல்லாத அருந்தல் பொருந்தல் ஆதிய வேட்கை யாவும் அடங்கும் என்பது. இவ்வாறான விஷயப்பற்றே — பாசமே கோபம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் (அழுக்காறு) என்பனவற்றிற்கும் அடிப்படையாகும். இது பற்றியே அறுபகைகளுள் காமம் முதற்கண் வைத்து எண்ணப்பட்டது என அறிதல் வேண்டும். அவாவியது பெறுதவழி உளதாகும் அவச்சலனமே கோபமாகின்றது. பிறர் அநுபவம் கண்டவழி ஆற்றாமையே பொறாமை ஆகின்றது. பிறவும் அன்ன. இவ்வாற்றால் அசுத்த காமமே உலகில் நிகழும் எவ்வகைத் தீமைக்கும் அடிப்படை என்பது வெள்ளிடை ஆம். கள்ளுணல், களவு, பொய், கொலை என்பனவற்றிற்கும் அசுத்த காமமே அசுத்த அவாவே காரணமாதலால், இத்தகைய அசுத்த காமம் உரிய சாதகங்களால் மாற்ற மடைந்துழி ஏனையவும் மாற்ற மடைவனவாகும் — ஒழிவனவாகும். நிறை முறை இல்லாக் காமத்துக்குக் கட் குடியும் களவும் பொய்யும் கொலையும் தோழமை பூண்டுள்ளன.

எக்குற்றங்களையும் பொறுக்கும் மாதாவும் தன் புதல்வன் கள்ளுண்டு களித்தலைப் பொறுக்கமாட்டாள் என்றால், அக் கட்குடியான் வரும் மயக்கமாகிய களியாட்டுப் பெரியோர் முன்னிலையில் யாதாய் முடியும் என நிறை முறை இல்லாக் கட்குடியைத் தேவரும் கண்டித்துக் கூறினர்.

## குறள்

ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென் [மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

( ஷை 93-ம் அதி. கள்ளுண்ணாமை செ. 2)

மற்றைய களவு — சூது — வஞ்சம், நிறை முறை இல்லாத — அவசிய மற்ற கொலை; தீமை பயக்கும் பொய் அழுக்காறு என்பன யாவும் வேத நூல்கள் நீதி நூல்களாலும் மற்றைய நூல்களாலும் கண்டிக்கப்பட்டுள்ளன. அந்நூற் பிரமாணங்களை யெல்லாம் ஈண்டு எடுத்துக் காட்டப்புகின் மிகப் பரக்கும். ஆங்காங்குக் கண்டு தெளிக. கீழ்மை எனப்படும்—இழிந்தன எனப்படும் இக் குணங்கள் — செயல்கள் நிறை இல்லாதவர் மாட்டே—அசுத்த நிறையுடையவர் பாலே ஆக்கமுறுவனவாம் என்பது பின் வரும் புகழேந்திப் புலவர் வாக்கானும் வெள்ளிடை ஆம்.

### நள வெண்பா.

காதல்கவறாடல்கள்ளுண்டல்பொய்ம்மொழி [தல்
ஈதல்மறுத்தல்இவைகண்டாய்—போதில்
சினையாமைவைகும்திருநாடாசெம்மை
நினையாமைபூண்டார்நெறி.

[காதல் — அசுத்த காமப் புணர்ச்சியை அவாவுதல். செம்மை — நிறையுடைமை — சுத்த நிறை. செம்மை நினையாமை பூண்டார்—அசுத்த நிறையாகிய கீழ் நிறைப் பொலிவுடையவர்.]

இழிந்த குணங்கள் எனப்படும் இக் குணங்களை — நிறை முறை இல்லாத ஒழுக்கத்தை இயன்றவரை அகற்றியே உலகில் வாழ வேண்டும். பிரபஞ்ச வடிவாய் விளங்கும் இக் குணங்களை நிறை முறையோடு தழுவியே உய்தி அடைய வேண்டும். படிப்பு—சாஸ்திர ஆராய்ச்சி, கடவுள் வழிபாடு — மூர்த்தி, தலம் தீர்த்தம், நல்லோரிணக்கம் (சற்சன சகவாசம்) என்பனவற்றானும் மதி வைராக்கியத்தானும் தீய குணங்கள் மேற்படாதவாறு அவற்றை இயன்றவரை அடக்கி வாழ வேண்டும். இன்றேல் உலகியலில் துன்பமில்லாது ஒருவாறு இருத்தல் முடியாத காரியம். தீய குணங்கள் புறத்துத் தோன்றாதவாறு போலிச் சத்துவம் வகித்து நடித்தலும் முன்னிலைகளால் துன்புறாது இருத்தற்குரிய ஒருவகையான லௌகீக தந்திரமாகும். உலகியலில் "கீழ்மை" எனப்படும் இழிவான குணங்களை அகற்றி வாழும் முறை இதுவே. இத்தகைய ஒழுக்கம் மேல் வாய்மையாகக் கீழ்மை அகற்றி உய்தியடைதற்கு — நித்தியத்துவம் பெறுதற்கு ஒருவாற்றால் துணை புரிவதும் ஆகும். இவ்வாற்றால், "கீழ்மை அகற்று" என்னும் அமுத வாக்கியம் உலகியலுக்கு ஒப்பியவாறு பொருள்பட நிற்றல் கண்டு கொள்க.

மேல் இவ் வேத சூத்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறி இக்கட்டுரை முடிக்கப்படும்.

கீழ்மை — கீழ் நிறைப் பொலிவடைந்த — கீழ் நோக்கிய குண்டலியை, அகற்று—உரிய சாதகங்களால் அக் கீழ் நிறைப் பொலிவினின்றும் நீக்கி மேலே சுழிமுனையைத் தாவிக் கெதி பெறச் செய்து நித்தியத்துவம் பெறுவாயாக என்பது இவ் வேத மந்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளாகும். கீழ் நிறைப் பொலிவாகிய அசுத்த நிறையை நீக்குவாயாக — மாற்றுவாயாக எனப் பொருள் கூறினும் அமையும். மருளுடம்பினர்களாகிய எம் போலிய சீவர்களுக்குக் குண்டலி சத்தியானது கீழ்நோக்கியே நிற்பதாகும். சீவன் முத்தர்களுக்கு மேல் நோக்கியே நிற்பதாகும். உரிய சாதகங்களால் குண்டலியின் மேல் நோக்கு ஆரம்பமாகவே மருளுடம்பில் உள்ள அசுத்த நிறையும் மாற்ற மடைய ஆரம்பமாகும். இருவினை சொரூபமாகிய சரீர பௌதிகங்கள் நிறை பெறாது — சமமின்றி — திணை மயக்கமாய் — ஏற்ற இறக்கமாய் இருப்பதே அசுத்த நிறை எனப்படுவது. இருவினை சொரூபமாகிய உடலுயிர் ஏற்ற இறக்கம் விடுபட்டு சமமுறவே அசுத்த நிறையும் மாற்ற மடையும்; மலம் விமல மாகும் — பரிபாகம் அடையும் என்பது. கீழ்முகமாமத் தூங்கும் குண்டலியானது, குருவருளால் பெறப்படும் உரிய சாதகங்களால், விழிப்புடையதாய் வாலில் தட்டப்பட்ட நாக பாம்பு போல நிமிர்ந்து மேல் எழுகின்றது. மூலாதாரத்தை நோக்கித் தூங்கிக் கிடந்த குண்டலியைமேலே செல்லும்படி மாற்றுதலால் — கிளப்புதலால், அது பிலத்திற் குடிபுகும் பாம்பு போலச் சுழி முனையில் செல்லுகின்றது. இக்குண்டலியை வாலைப் பிடித்து எழுப்ப வேண்டும் என்பர். வால் என்றால் தூய்மை எனப்படும். குண்டலியே வாசி — வாயு — பாம்பு எனப்படுவது. இவ் வாயு அக்கினியோடு அபேதமாய்க் கலந்து அசுத்த மடைந்து இருக்கிறது. குண்டலியே சரீரம் எனவும் கூறப்படும். அசுத்தமான வாயுவினால் ஆவது இவ்வுடம்பு. ஆதலால் உடல் வேதம் எனப்பட்டது.

"வேதத்தின் ஒத்த உடல்"

என்றனர் திருமூலர். (திருமந்திரம்) வ+ஏதம்=வேதம். வகரமாகிய வாயுவில் உள்ள ஏதத்தை — களிம்பை — தடிப்பை நீக்கி அதனை அமலமாக்குதற்குரிய பொதுவான சாதகங்களைச் சமக்கிணையாகக் கூறும் நூல்களே உலகில் வேத நூல்கள் என வழங்கப்படுகின்றன. வாசி என்னும் அசுத்தம் மலிந்தவாயுவினால் ஆயது இவ்உடம்பு. அவ் வாயுவினால் நிலை பெற்றிருப்பது இவ் உடம்பு. அவ் வாயு இன்மையால் — நீங்குவதால் அழிந்துபடுவது இவ் உடம்பு. வாயு என்னும் காற்றடைத்த பை எனப்படுவது இவ் உடம்பு. அவ் வாயு என்னும் வாசி அசுத்தம் நீங்கி வசப்படுவதால் அழிந்துபடாது நித்தியத்துவம் பெறுவது இவ் உடம்பு. ஆதலால் "வேதத்தின் ஒத்த உடல்" எனப்பட்டது. குண்டலியே சரீரம் எனப்படுவதன் உண்மையும் இதுவே ஆம். கீழ்நோக்குடைய வாசி என்னும் குண்டலியை விமலமாக்கி மேல் நோக்கச் செய்வதே "கீழ்மை அகற்று" தலாகும். இதனை அமலமாக்குவதே அசுத்த நிறையை அமல நிறையாக மாற்றுத

னும் ஆம். இக் குண்டலி என்னும் வாயுவானது கீழ்முக விளைவு என்னும் நாணலும் பக்கச் சலன கதி என்னும் கோணலும் உடையதாய் அசுத்தம் மலிந்து இருப்பதே காமம் கோபம் முதலிய தீய குணங்களுக்கும் சரீரம் பிணி மூப்புக்களால் நலிந்து பிணமாகி அழிந்துபடுதற்கும் காரணமாகும். குரு அருளால் பெறப்படும் உரிய சாதகங்களால் — நிறை முறையான இல்லற ஒழுக்கத்தால்—அருந்தல் பொருந்தல்களால் இவ் வாயு அசுத்தம் நீங்கி விமலமடைய வேண்டும். அடையவே கோடிநிலை வள்ளி எனப்படும் பிராணனும் அபானனும் வடு நீங்கிச் சிறந்து அஷ்டாவது விமலமடைந்துசமமுறும்; இருவினை ஒப்பு மல பரிபாகம் கைகூடும்; உடலுயிர் விமலமடையும்; கந்தழி சித்திக்கும். விமல தேகமாகிய இடப தேகத்தில் சிவம் விளங்கி நிற்கும் — எம் பெருமான் இடபாரூடனாய்க் காட்சி கொடுத்து நிற்பன். அமல முதற்படி இதுவே. கழுக்குன்றம் என்னும் மலத்தைக் கழுவும் அமுதம் ஊறும் இடம்—"ஊனந்தன்னை ஒருங்குடன் அறுக்கும் ஆனந்தம்" (திருவாசகம்) எனும் ஆறு ஊற்றெடுக்கும் இடம் இதுவே; யாவற்றையும் பூரணமாய் அறிதற்குரிய ஞான திருஷ்டி அமையும் இடம் இதுவே என்க. நாணல் கோணல் அமைந்த அசுத்த வாயுவின் ஆதிக்கத்தால்—கீழ் நிறைப் பொலிவால் தாம் வருந்தியமையையும் பின் அன்பு நெறியால் "தூக்கி வினை செய்து கீழ்மை அகற்"றி — வாயுவை மேலேற்றிக் கழுக் குன்ற தரிசனம் பெற்று — பூரண ஞானம் பெற்று உய்தியடைந்தமையையும் பின் வரும் செய்யுளால் நன்று புலப்படுத்தியருளினார் மணிவாசகப் பிரபு என அறிதற்பாற்று.

## திருவாசகம்.

பூணொ ணாததோர் அன்பு பூண்டு பொருந்தி
நாடொறும் போற்றவும்
நாணொ ணாததோர் நாண மெய்தி
நடுக்க டலுள் அழுந்திநான்
பேணொ ணாதபெ ருந்துறைப் பெருந்
தோணி பற்றி யுகைத்தலும்
காணொ ணாத்திருக் கோல நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

(ஷை திருக்கழுக்குன்றப்பதிகம் செ. 4.)

"உற்ற ஆக்கையின் உறுபொருள்"

ஆய் என்புக்குள் மறைந்து கிடக்கும் இன்பை — சிவம் என்னும் செம்பொருளை விளைவேற்றிக் காண வேண்டும். அன்பு என்னும் அப்பே உப்பு. அது துப்பு என்னும் களிம்பாகிய அசுத்தம் மலிந்து பிரிபடாதவாறு அபேதமாய்க் கலந்து கிடக்கிறது. ஆதலால் அதற்குரிய சாதகங்களால் — நிறை முறையான அருந்தல் பொருந்தல் என்னும் இல்லற ஒழுக்கத்தால் அவ் அப்பில் இருக்கும் துப்பை நீக்கினால் அது இனிமையாகும் — இன்பாகும் — ஜீவாம்ருத தேனாகும் — சிவமாகும். அன்பில் இன்பைக் காண்பது — அன்பு வடிவாகிய சிவபரம் பொருளைக் காணும் திறன் இதுவே என்க.

## ஞானவாசிட்டம்.

### தேவ பூசை கதை.

இனையதிரவி யங்களெலா மினிதாஞ்சாந்தி
[யொன்றாலு
நினைபாவனையாற் புளிப்புறைப்பு நிறைந்
[தகைப்புத் துவர்ப்பனைத்தின்
றினையுமின்றிச் சித்திரமாந் தித்திப்பாலே
[செறிந்தனவா
யனையசாந்தி மதுரத்தர் லறவேநிறைந்த
[தருந்தவனே.

தக்கசாந்தி பயிலிரத சுத்தியாலே பாவிக்
[கிற்
றேக்கபொருளாய்க் கர்ண்பதேலாஞ் சுதை
[யர்யிமைப் பேற் றாய்மதியி
னுக்கவிரதம் போலாத முயர்ந்த சமமாஞ்
[சாந்தியினன்
மிக்கவறிவா லியுங்கற்போல் விளங்கு
[முணர்வாற் பாவிக்க.

(ஷை செ. 53. 54.)

## திருவாசகம்.

"அன்பினில்விளைந்தஆரமுதே"
"இன்பமேஎன்னுடைஅன்பே"
எனவும்,

## திருமந்திரம்.

"அன்பே சிவம்"

எனவும் வரூஉம் திருவாக்குக்களின் உண்மையும் இதுவே ஆம். இப்பெற்றி கைகூடுவது என்றால், வாய்மையான அன்பு பூண்டு ஒழுகுவது என்றால் எம் போலிய உலக மாக்களுக்கு எளிதாமோ? சீவர்கள் தற்சுதந்தரத்தை அதாவது தங்கள் இச்சைகளை ஆசான் அடிக்கு அடிமை செய்து ஆசான் அருள் உரையிற் கட்டுண்டு ஒழுக வேண்டுமென்றால், அரிது அரிது மா அரிது அல்லவா? குரங்கு மிளகு ரசம் குடிப்பதற் கொக்கும் அல்லவா? இது பற்றியே "பூணொணாததோர் அன்பு பூண்டு" என்று கூறப்பட்டது. கீழ் நோக்கிக் கிடந்த—நாணிக் கிடந்த அசுத்த வாயுவால் அடைந்த சரீரத் துன்பம் அளவிடற்கரியது என்பது போதர "நாணொணாததோர் நாண மெய்தி" என்று கூறப்பட்டது. அவ் வாயு என்னும் குண்டலியானது கீழ் நோக்கும் (நாணல்) பக்கச்சலன கதியும் (கோணல்) நீங்கி மேல் நோக்கத் தொடங்குங்கால், (பேணி, படுதாபூரி, பாதுஷா, கீவர், உருளைக்கிழங்கு போண்டாக்கள் உண்பது போல் இராது) உளவாகும் பைதல்கள்—பையாப்புக்கள்—துன்பங்கள் சகித்தற்கு அரியன என்பது போதர "நடுக்கடலுள் அழுந்தி" என்று கூறப்பட்டது. கடல் எனப்பட்டது உடலே ஆம். அது "கடலே கடலே உன்னைக் கலக்குறுத்து" என்னும் நாச்சியார் திருவாய் மொழிச் செய்யுளாலும் அறியப்படும். வாயுவைக் கபாலம் ஏற்றுவது — லலாடம் என்னும் அகண்ட வெளியை அடையச் செய்வது அரிதினும்

அரிதாம் என்பது போதர "பேணு ணுதபெருந்துறை" என்று கூறப்பட்டது. பெருந்துறைத் தோணி — எம்பெருமான் திருவடியாகிய குழலொலி யாழொலி, கூத்தொலி, ஏத்தொலி என்னும் நாதம். பெருந்துறைத் தோணி பற்றி உகைத்தலால் — ஊக்குதலால் — சுத்த நந்தி நாதத்தின் வழியே செல்லுதலால் கழுக்குன்ற தரிசனம் உளதாயிற்று. "கணக்கிலாத்திருக்கோலம்நீ வந்துகாட்டினாய் கழுக்குன்றிலே" என்றார் மணிவாசகர். கழுக்குன்றில் எதனைக் கண்டார் மணிவாசகர்? எதனைக் காட்டினார் சிவ பெருமான்? புகலிடமாகிய — மலத்தைக் கழுவும் அமுதம் ஊறும் இடமாகிய கழுக்குன்றத்தை அடையவே குண்டலி எனும் வாசி—மனம்—உணர்ச்சி தூய்மை அடையும். அடையவே யாவற்றையும் தடையின்றி அறியும் தூய உணர்ச்சி எனும் ஞான திருஷ்டி—எம்பெருமானது உண்மை வடிவைக் காணும் ஞானக்கண் அமைவதாகும். இதுவே கந்தழியைப் பெற்ற இடம் — இருவினை ஒப்பு மல பரிபாகம் வாய்ந்த இடம்—விமல யாக்கைபெற்ற இடம் என்க. "என்வினை ஒத்தபின் காட்டினாய் கழுக்குன்றிலே" (ஷை பதிகம் செ. 1.) என்பதன் பொருள் இதுவே. இதுதான் அமல முதற்படி —முத்தி வாயில். இப்படியை அடைந்தவர்க்கு யாது குறையும் இல்லை. எதை எதை நினைப்பினும் அது அது எல்லாம் இயங்கும். இவ்விடத்தை அடையப் பெற்ற மெய்யடியாராகிய வழியடியாரே நினைத்த போகங்களை எல்லாம் கண்டு நிறையோடு உண்டு, விமல அவாவினை விண்டு, உபரதி பெற்று உடலுயிர் பூரண அமல மடைந்து நித்தியத்துவம் பெற வல்லராவர். இவ்விடமே "கீழ்மை" அகன்ற இடம். அசுத்த காமம் முதலிய குணங்கள் எல்லாம் சுத்தகாமம் சிவகாமம் முதலியனவாக மாறிய இடம். ஆலம் அமுதமான இடம். காலனைக் காலால் உதைத்த இடம். விதியை மதியால் வென்ற இடம். கீழ்மை அகற்றுதலால் — வாயுவைக் கபாலம் ஏற்றுதலால் ஆம் பயன் இதுவே என்க. இவ்வாறு இயற்கை முறையாகக் "கீழ்மை அகற்"றி உய்தி பெறுதார்க்கு முத்தி வாயில் முயற்கொம்பே ஆம். முன்னிலையாகிய உலகம் — உடலுயிர் அசுத்த மயமாக — அசுத்த காமம் முதலியன உடையனவாகவே இருத்தலால் இவற்றை நிறைகண்டு பஞ்சீகாணித்தே — இவ் ஆயுதங்களை நிறை முறையோடு வழங்கியே மாயைப் போரில் வென்றி பெறவேண்டும். இஃதன்றி வேறு தடம் யாது? "கீழ்மை அகற்று"தலே வாய்மையான வாசி யோகம். குண்டலியை வசப்படுத்துதல் —மாயையை அடிப்படுத்துதல்— விதியை வெல்லுதல் என்பது இதுவே. முத்திநெறி இதுவே என்க. இயற்கைக்கு மாறாக வாசி என்னும் வாயுவை வலிதின் அடக்கித் தவம்புரிதல் என்பது முத்தி நெறி அறியாத மூர்க்கர் செயலே — மூடர் செயலே ஆம். இவ் அசட்டு யோகத்தால் கீழ்மை அகற்றி —குண்டலியை வசப்பண்ணி—காமம் முதலிய பகைகளை வென்று — விதியை வென்று நித்தியத்துவம் பெறுதல் முயற் கொம்பேயாம்; பௌதிகங்கள் சமப்படாது பேதித்தலால் பரிதாபகரமான மரணமே உளதாகும்: அசுத்த காமத் தீயால் வெதும்பிச் சாதலடைதலே — பிறவி நெறியே உளதாகும் என்க. இவ்வாற்றால்,

"கீழ்மை அகற்று"

என்னும் வேதமந்திரத்தின் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருள் கண்டு கொள்க. மேலும் விரிப்பிற் பெருகும்.

இதுகாறும் கூறியவைகளால் "கீழ்மை அகற்று" என்னும் ஔவையார் அமுத வாக்கின் உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருள் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.

---



---

## பிழை திருத்தம்.

"வித்தகம்" தொகுதி 2 இல. 44.

| பக்கம். | பிரிவு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 8 | 1 | 18 | திருவாரூர் சோமசுந்தர தேசிகரால் | நாகை நீலலோசனிப் பத்திராதிபர் ஜி. சதாசிவம்பிள்ளையால் |

ஷை ஷை இல. 45.

| பக்கம். | பிரிவு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 1 | 1 | 2 | பாரோடு | பாரொடு |
| 5 | 3 | 27 | முடியாத காரியம். | முடியாத காரியம் ; |
| 7 | 1 | 22 | திவிலே | திவலே |
| 8 | 2 | 6 | திருவாக்குக்கு | திருவாக்குக்களை |

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 45-ம் வாரத் தொடர்ச்சி.)

வித்துவப் பெரியாராகிய சந்தான குரவர் மொழி பெயர்த்தனவும் இயற்றியனவுமாகிய சாத்திரப் பெயர் பூண்ட நூல்களில் இவ் அரிய பெரிய வேத ரகஸியங்கள் எட்டுணையும் கூறப்படவில்லை என்பது யாவரும் அறிந்த உண்மையே ஆம். விருத்தாசலத்து பெரியநாயகி அம்மையார் திருவருளாணையால் சுத்த சாதகத்தை அருளிய குமார தேவர் ஒழிய மற்றைய சாத்திர நிபுணருள் எவராவது உடலுயிர் அமலமடைந்து அருளாய் வெளியாய் உலகு கண்டிட மறைதலே உண்மை முத்தி என்று ஒரு சிறிதாவது கூறினரா? இச் சாத்திர நிபுணர் எல்லாம் சமய குரவர் முதலியோர் உடலோடு உலகு கண்டிட மறைந்து அடைந்த உண்மை முத்தியை — அவர் தம் தம் அருள் வாக்காலும் அரும் பெரும் செயலாலும் நிலை நாட்டிய உண்மைச் சைவ முத்தியை — அவர் கண்டு கொண்டு உண்டு உய்ந்த சத்திய நெறியை ஒருகால் கேள்வியாலாவது அறியாதிருந்தனர் என்று கூற முடியுமா? கூறுவது உசிதமாகுமா? இறக்கும் தருணத்திலாவது உண்மையை கூறி விட்டு இறந்தனரா? உண்மை முத்தியையும் அதனை அடைதற்குரிய பொதுவான சாதக யோகங்களையும் விளக்கிக் கூறுது வேறு எதனைத் தான் இச் சாத்திர நிபுணர் உலகுய்யுமாறு கூற வேண்டும்? தூலத்தோடு மறைதலே உண்மைச் சைவ முத்தி என்று சாத்திர நிபுணராகிய இவ் வித்துவப் பெரியார் ஒருகால் கேள்வியால் அறிந்தவரே ஆயினும், உலகியல் நோக்கிய பரோபகாரப் பண்பினுற் போலும், தாம் உஞற்றிய நூல்களில் அம் முத்தி நிலையை வெளிப்படுத்தாமல் மறைத்துவிட்டனரே! அம்மட்டோ! இல்லை! இல்லை! அவ் வித்துவப் பெரியார், தமது படிப்பு வல்லபத்தால், தூலம் பிணமாகி விழ அதனைப் பிரிந்த உயிர் சிவத்தோடு (ஆமணக்கு நெய்யும் வண்டைக்காயும் போலக் குழ குழ என்று) கலந்து முத்தி அடைந்து விடும் என்னும் மூடக் கொள்கையையே, புறச் சமயிகள் போல, தமது சாத்திர வாயிலாக உறுதிப் பண்ணிவிட்டு இறந்து விட்டனர். ஒருகால் உடலோடு மறைதலே உண்மைச் சைவ முத்தி என்று அச் சாத்திர நிபுணர் தமது நூலில் இறுதி இதழிலாவது ஒரு கவியிலாவது ஒரு அடியிலாவது காட்டிவிட்டனரேயானுல் அப்பொழுதே மிகப் பெரிய சங்கடம் வந்து விடும். ஏன்? அவர் தம் சீடர்களாகிய உலக மாக்கள் சாத்திர நிபுணராகிய அவரைச் சும்மா விட்டு விடுவார்களா? "ஓ! ஓ! நீரே முத்தியடையும் நெறி அறியாது எங்களுக்கு முத்தி நெறி காட்டுவான் குரவராயினீரா?" என்று கலாம் விளைத்து அச் சீடர்கள் ஓரே கணத்தில் அவ் வித்துவப் பெரியார் கண்டு பிடித்த நூதன சைவத்தைப் பாழாக்கி விடுவார்கள் அல்லவா? இது பற்றிய சீவ காருண்ணியத்தாலும் போலும், அந்த அத்தியாயத்தைக் குழப்பி, தமது மனம்போனவாறு வித்தியா சாமர்த்தியம் குதிகொண்டு ஆடும்படி, ஞான விஷயம் என்று சில பலவற்றைத் திட்ப நுட்பம் செறிந்த சூத்திரங்களாலும் சிறந்த செய்யுட்களாலும் தொகை வகை விரியான் உரைத்து, உலகியலுக்கு ஏற்றவாறு செத்துப்போவதே முத்தி என்று பசுமரத்தாணி போல நிலை நாட்டிவிட்டு, இறந்து தமது தூலம் நிலத்துட் புதைக்கப்பட்டவராயினர் எமது சந்தானச் சாத்திர நிபுணராகிய வித்துவப் பெரியார் என அறிதற்பாற்று. இவ் வித்துவப் பெரியாரைச் "சிவாநுபூதிச் செல்வர்" எனவும், மணிவாசகர் முதலிய தத்துவப் பெரியாரோடு ஒப்ப மதித்துப் போற்றப்பட வேண்டியவர் என்வும் ஆதின பிரசாரகர் என்னும் அதிகாரம் தோன்ற அரற்ரு நின்று அடியேனுக்குப் புத்தி புகட்டத் துணிந்த ஆராய்ச்யாளராகிய எமது மு. பிள்ளையவர்கள் மதிப்பொலிவின் மாண்புதான் என்னே! ஆ! ஆ! இவ் வித்துவப் பெரியார் மொழி பெயர்த்தனவும் இயற்றியனவுமாகிய நூல்களைத் தத்துவப் பெரியார் அநுபவத் திருவாக்குக்களாகிய திருவாசகம் முதலிய தெய்வ மறைகளின் சாரம் ("நெய்யின் உறு சுவையாம்") எனவும், கயிலை முதற்குரவனுகிய நந்தியெம் பெருமானது பரம்பரையில் வந்தன எனவும், விக்கின விநாயகப் பெருமான் விளக்கியன எனவும் பொருந்தாக் கற்பனைகள் பொறித்து வைத்து மாண்டுபோன போலிச் சைவக்குன்றி மணிகளின் அபிமான சீலம் என்னென்று கூறி வியக்கப்படும். இவற்றின் ஆபாசமெல்லாம் ஈண்டு விரிப்பின் மிகப் பெருகும்.

(தொடரும்)

Imprimerie "VITTAGAM" — Pondichéry. Le Directeur-Gérant. R. Nagarattinam.